காண்பித்த குருவான காலாங்கிநாதர்
கடாட்சத்தா லடியேனுங் கருத்துஉண்ணி
ஏன்பித்த யெழுகாண்டம் வாதஞானம்
ஏற்றமாங் காயசித்தி கெவுனசித்தி
கூண்பெற்ற குளிகைசித்தி கெவுனசித்தி
கூறுத மந்திரந்தான் சித்தியெல்லாம்
நூண்பித்த நூலினுட நுட்பமெல்லாம்
நுண்ணிமையாய்க் கருமறைப்பு சொல்லிட்டேனே. (340)

சொல்லிவிட்டேன் காயசித்தி செய்யுமார்க்கம்
சோதித்து அடிதொடுத்து நுனிமட்டுக்கும்
சொல்லிவிட்டேன் யோகசித்தின் பயிற்சியெல்லாம்
சுருதியா மனுபோகஞ் செய்தநேர்மை
சொல்லிவிட்டேன் சித்திக்க வழிவாங்கி
செயமான செந்தூரம் பண்ணும்நேர்மை
சொல்லிவிட்டேன் காயசித்தி முந்நூறுஞ்சொச்சம்
திருபாடல் பாடினேன் சென்னிதானே. (341)

தானான கற்பமது முந்நூறுஞ் சொச்சம்
* தாய்சொன்ன படியுண்டு சாதித்தேனான்
கோனான காலாங்கி நாயர்சொன்ன
குறிப்பெல்லாஞ் சோதித்துக் கொண்டமார்க்கம்
தேனான சிவயோக முனிவர்தானும்
சிறுபட்டர் சொன்னபடி சித்தியானேன்
பானான பராபரமாந் திருமூலநாயர்
பாட்டர்சொன்ன படிநின்று முடித்திட்டேனே. (342)

* தாய்—மனோன்மணி.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 7 | வாமமலல்லாங் | வாமமெல்லாங் |
| 5 | 8 | கிசயோக | நிசயோக |

# போகர் கற்பம் முற்றிற்று.